# நூல் அறிமுகம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சாரல் |
| நூல் ஆசிரியர் | : | பூ. இரத்தினசபாபதி |
| வெளியீடு | : | ஜனவரி,2023 |
| கணினி அச்சு | : | மணிகண்டன் |
| பக்கம் | : | 52 பக்கங்கள் |
| எழுத்து | : | 11 புள்ளி |
| மதிப்பு | : | ரூ.25 |

*புத்தகத்திற்காக செய்யும் செலவு செலவு அல்ல.*
*அது அறிவுக்கான முதலீடு.*

*புத்தகங்களை நேசியுங்கள். வாசியுங்கள்.*
*நண்பர்களுக்கு பரிசளியுங்கள்.*

மண்ணுக்கு மரம் தான் உரம்

மழைக்கு மரம் தான் வரம்

பூ. இரத்தினசபாபதி

# பொருளடக்கம்

நீர்

இயற்கை அன்னை

பல்லுயிர் பாதுகாப்பு

ஆராய்ச்சியில்

இயற்கைவளம்

வேட்டையாடு

மரம்

உங்களுக்காக உறங்காமல்

மகரந்தச் சேர்கை

சங்கிலி

பறவை

மாசு

விருட்சம்

மண்

பாசம்

தகவமைப்பு

சீரமைப்பு

சதுப்பு நிலம்

அனைத்தும் யாருக்காக

# அணிந்துரை

"சாரல்" என்ற புத்தகத்தை தந்து, அணிந்துரை வழங்க வேண்டும் என்று அன்பு கட்டளையுடன், வந்து நின்றார், திரு.இரத்தினசபாபதி அவர்கள். சூழலியல் நிபுணரான இந்த நூல் ஆசிரியர், சூழல் பற்றிய புத்தகம் தானே படைப்பார் இது என்ன "சாரல்" என நினைத்தேன்.



சாரல் மழையில் நனைவது போல இந்த புத்தகத்தில் அவருக்குள்ளே இருக்கும் கவிஞரை அவர் தட்டி எழுப்பி இருக்கிறார் என்பதை அங்கங்கே தொட்டு காட்டும்படி இருந்தது.

இது புதுக் கவிதை நடையில் அமைந்த தமிழ் கவிதை என்று நோக்காமல், இதில் நூல் ஆசிரியர் சொல்ல வரும் கருத்துக்கள், இரண்டு வரிகளில் "நச்" என சொல்லும் செய்திகள் நம்மை சிந்திக்க வைக்கிறது.

"நிற்க எனக்கு நேரமில்லை நெடுந்தூரம் போக வேண்டும்" என்று ஓடும் இந்த அவசர உலகில், மக்கள் மனதை தொட்டு காட்ட இரண்டு வரியில் சிந்தனையை தட்டி கொடுத்த அமைப்பு பாராட்டுக்குரியது.

இந்த படைப்புகள் எல்லாம் மரபு கவிதை அமைப்பில் இல்லை என்றாலும் தனது சிந்தனைகளை சாரல் மழை போல நம்மை நனைய வைத்துள்ள பாங்கு பாராட்டுக்குரியது.

நீர் வளம் குறைந்து வரும் இன்றைய சூழலில், நீரின் மேன்மையை எடுத்துக் காட்டி,

**பெய்யும் மழையை ஓடவிட்டு,**

**கடலில் கரையவிட்டு**

**கண்ணீர் விடும் மானிடனே**

**சேமிக்க தெரிந்த நீ**

**சிந்திக்க தெரிந்த நீ**

**செயல் பட்டாயா?**

என தனது ஆதங்கத்தை வெளிப்படுத்தி, தன் கோபத்தை காட்டும் பாங்கு பாராட்டுக்குரியது.

ஒவ்வொரு கவிதையிலும் எடுத்து சொல்ல ஒரு சில வரிகளை சொல்லலாம் என்றாலும்

**மரம்தான் மாசின் எதிரியாம்....**

என்று ஒரு வரியில் நம்மை சிந்திக்க வைத்து இருக்கிறார் திரு இரத்தினசபாபதி அவர்கள்.

**நீங்கள் மாற நீண்ட யுகம் ஆகும்.**

என்று சொல்லி நம்மை சிந்திக்க வைத்து பஞ்ச பூதங்களை புத்தகத்தில் கொண்டு வர செய்து இருக்கும் இவரது முயற்சிக்கு பாராட்டுதல்களை பதிவு செய்வோம்.

இவரின் இன்ன பிற படைப்பான "**ஆந்தை-அறிமுகம்**" என்ற நூலை படிக்க தூண்டும் விதமாக ஆந்தை பற்றிய சிந்தனையும், "**தலைமுறை கண்ட தல விருட்சங்கள்**" என்ற நூலை படிக்க தூண்டும் விதமாக தல விருட்சங்கள் பற்றிய படைப்பும் இந்த நூலில் சேர்த்து செய்து இருக்கிறார் என்பது மகிழ்ச்சிக்குரியது.

**வீடும் சிறு தேட்டமாகும்**

**இப்பொழுது மணல் இல்லை**

**மண் எப்பொழுது என தொரியவில்லை**

என இயல்பான போக்கில் சொல்வது போல சிந்திக்க செய்திகளை தந்து இருப்பது பாராட்டுக்குரியது.

'யாருக்காக' என்ற தலைப்பில், இயற்கை அன்னை தந்து எல்லாம் நமக்காக ஏன் என்றால், "**புதியதோர் உலகம் செய்ய முடியாது என்பதற்காக**" என்று முத்தாய்ப்பாக இந்த நூலை நிறைவு செய்து இருப்பது நிறைவை தருகிறது.

மொத்தத்தில் இந்த "சாரல்" நனைந்து மகிழவும், இன்றைய நிலையினை எடுத்து சொல்லும் ஆதங்கத்தையும் பதிவு செய்து நம்மை சிந்திக்க செய்து விட்டார்.

ஒவ்வொரு தலைப்பின் தொடக்கத்திலும் திருக்குறள் மற்றும் சங்க இலக்கியங்களில் இருந்து குறிப்புகளை தந்து இருப்பது, இவரது தமிழ் ஆர்வத்தை காட்டுகிறது அதற்காக சிறப்பான பாராட்டுக்களை பதிவு செய்கிறோம்.இவரது படைப்புகள் அன்பார்கள் வாங்கி பயனடைய வேண்டும்.

வீட்டுக்கு ஒரு மரம். இல்லை.. இல்லை.. ஆளுக்கு ஒரு மரம் நட்டு வளர்க்க வேண்டும் என்று உறுதி ஏற்போம் இயற்கையை காப்போம்.

பேரன்புடன்,
விசு அய்யர்
iyervisyer@gmail.com

எனது
35 வருட அனுபவத்தில்
இயற்கையை

நான் ரசித்ததில்
ஈடு இணை எதுவுமில்லை

இந்த இயற்கை இடத்தில்
எல்லாம் கிடைக்கும்
ஓசியில் நாம்

இப்போது ஆங்கிலத்தில் சொல்வதானால்,
பிசியில்

பிரமிப்பு

இந்த
இனிய இயற்கையில் அடங்கியுள்ள அர்த்தம்
இது பற்றிய செய்திகள் தினமும் வருவதில் குறைவில்லை.

தாரளமாக – நாம் தான் செவிசாய்பதில்
தாமதம் செய்கிறோம்.

இனி நாம் தாமதிப்பதில்
எந்த பயனும்

எதிர் காலத்தில்
இல்லை

கட்டாயம் என்பதில்
உறுதியுடன்

# என்னுரை

இரண்டு வரிகளில் இயற்கைப் பற்றிய சிந்தனைகளை புது கவிதை வடிவில் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

சூழலியல் பார்வையில் அமைந்த வரிகள் ஒவ்வொன்றும். நான் ரசித்த, உணர்ந்த, அனுபவித்த இயற்கை அன்னையின் மொழியாக என்னால் முடிந்த அளவில் எளிய தமிழில் எல்லோருக்கும் சென்று சேர வேண்டும் என்று படைக்கப்படும் கவிதைப் தொகுப்பாகும்.. அவசர உலகில் அங்கலாய்ப்பு செய்யும் இந்த தருணத்தில்,

இரண்டு வரிக் கவிதைகள் தான் ஆழமாக சிந்திக்க வைக்கும் என்பதை உணர்த்தியது உலக பொதுமறையாம் திருக்குறள்.

கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது என சொல்லுவார்கள் இல்லையா அது போல சிரமப் பட்டு தமிழ் படிக்கும் இன்றைய இளைய தலைமுறைகளுக்கு விரைவில் புரிதல் வர வேண்டும், என்பதற்காக அவர்கள் எண்ண ஓட்டத்தில் சில பதிவுகள் அமைந்து விட்டன.

இப்படி படிப்பதால் இயற்கையை பாதுகாக்கும் உணர்வு கூடும், இவ்வையகம் பயனடையும் என நான் உறுதியாக நம்புகிறேன்.

ஒரு நாள் அதிகாலை பொழுது படுக்கையில் இருந்தபடி இந்த நூலில் உள்ள சிலவற்றை சிந்தனையில் பதிந்ததை மொபைலில் டைப்பி கொண்டு இருந்தேன்.

பொழுது விடிந்ததும் எனது துணைவியாரிடம் படித்து காட்டினேன். இதை புத்தகமாக்குங்கள் என்று ஊக்கம் கொடுத்தார். எனது துணைவியார் திருமதி ஞான செல்வி, அவர்களுக்கு நன்றியையும் பாராட்டுதல்களையும் பதிவு செய்கிறேன்.

இந்த புத்தகத்தை பிழை திருத்தி, வடிவமைத்து அணிந்துரை வழங்கிய எனது நெடுங்கால நண்பர், திரு.விசு அய்யர் அவர்களுக்கு எனது நன்றியை பதிவு செய்கிறேன்.

வழக்கம் போல இந்த புத்தகத்தை நேர்த்தியாக அமைத்து தந்த அருண் பதிப்பகத்தாருக்கு மனம் நிறைந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.

சூழலியல், அறிவியல் என ஆய்வுக் கட்டுரைகள் எழுதிய நான், படைக்கும் முதல் கவிதைத் தொகுப்பு இது.

அன்பர்கள் இந்நூலினை வாங்கி படித்து ஊக்குவிக்க வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

பூ. இரத்தினசபாபதி
சூழலியல் நிபுணர்
கோவை
brspathy@gmail.com

# *உலக நீர் தினம்*

**உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து. (குறள் 24)**

**உலக நீர் தினத்தை ஒட்டி படைத்த படைப்பில் இருந்து தொடங்குகிறேன்.**

*நீர் நீராக இல்லாமல்*
*ஏன்*
*மாறுகிறாய் பல வடிவில்*

*எங்களுக்காக*
*ஆர்டிக் அண்டார்டிகாவில்*
*பனியாக*

*ஆழ்ந்த கடலுக்கு அடியில்*
*எண்ணெய்யாக*
*ஆறு, குளங்கள்*
*குடிநீராக*
*நீராக கல்லுக்குள்*
*ஆவியாக*
*எங்களது உணவில்*
*என்று*
*திடம் திரவங்களில்*
*போட்டியிட*
*யாரும் உண்டோ இவ்வுலகில்*
*நிகராக*
*இன்ப துன்பங்களில்*
*கண்ணீராக*
*பஞ்ச பூதங்களில்*
*ஒன்றாக*
*இறுதிவரை எங்களில்*
*ஒருவராக*

*சாதி மதங்களில்*
*ஈடுபடா*
*இவ்வைப நன்மைகளில்*
*நீருக்கு*
*நிகர் தேடுகையில்*

*விடை*
*அல்ல.. இல்ல..! என்பதில்*
*உறுதியாக*
*மனிதகுலம் இருப்பதில்*
*ஐயமில்லை....*

*நீர்.. நீரே.! என்பதில்*
*மாற்று கருத்தல்ல!*

*எங்களுக்கான வாழ்நாளில்,*
*பல்வேறுபட்ட*
*வடிவில் வேடமிடுவதில்.*
*நீருக்கு நிகர் ஒன்றுமேயில்லை.*

*மனிதன் கண்டுபிடிப்பதில்*
*மாற்று தோல்வி*
*நாங்கள் அனுபவித்ததில்*
*வரும்*
*வளரும் சந்ததிகள்*
*அனுபவிக்க*
*முயற்சிப்போம் முடிந்தளவில்*

*சந்ததிக்காக*
*மேலும் அசுத்தப் படுத்தாமல்*
*சவாலாக*

*நீர்நிலைகளை பாதுகாப்பதில்*
*முன்நின்று*
*இதுவே இன்றைய சூழலில்*
*சரி என்று*
*திகழ்வோம் ஒன்றினைவதில்*
*முதன்மையாக....*

# *தண்ணீர்... தண்ணீர்....*

**நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும்**
**மாந்தர்க்கு இனத்தியல்ப தாகும் அறிவு.(குறள் 452)**

*படைத்தல் - நீர்*
*உயிர் உலகில் தோன்ற*
*காத்தல் - நீர்*
*இவ்வுலகில் வாழ*
*அழித்தலும் -நீரே,*
*சுணாமியாய், வெள்ளமாய்*
*சிந்தித்தால்*
*அளவுக்கு மிஞ்சினால்*
*அமிர்தமும் நஞ்சு*
*நீருக்கும் அதுவே.*

*நீரின் எல்லையை*
*மிஞ்சிய மனிதன்*
*நிலாவில், செவ்வாயில்*
*நீர் தேடி நீண்ட பயணம்*
*சாமானியனுக்கு கிடைக்குமா?*
*பெய்யும் மழையை*
*ஓடவிட்டு, கடலில் கரையவிட்டு*
*கண்ணீர் விடும் மானிடனே*
*சேமிக்க தெரிந்த நீ*
*சிந்திக்க தெரிந்த நீ*
*செயல் பட்டாயா?*

*நீருக்கு யாதும் ஊரே! யாவரும் கேளீர்..!!*
*எல்லா ஊரும் என்னிடம்*
*எல்லா மக்களும் என் வசம்ஞ்*
*இருப்பதை காப்போம் விரைவாக,*

*தற்பொழுது பாட்டிலில் நீராக..*
*இல்லையேல் கேப்சியுலில் அடைபட்ட நீராக*

*விழிப்புடன் செயல்படுவோம்*
*அவைவரும் பயணடைவோம்.*

# இயற்கை அன்னை

**'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்..' (972)**

**'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்..' (322)**

என்ற இரண்டு குறட்பாக்களில் அவர் பயன் படுத்திய உயிர் என்ற சொல்லாட்சி கருதத் தக்கது. திருவள்ளுவர் பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்ற குறட்பாவில் ஓரறிவுடைய உயிர் முதல் ஆறு அறிவு உயிர் வரை பிறப்பால் ஒத்தன என்று வலியுறுத்துகிறார்.

**''மண்டினிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளியும்**
**வளித்தலைஇய தீயும்**
**தீ முரணிய நீருமென்றாங்கு (புறநானூறு: 2-1.6)**

*அளவில்லாமல் அள்ளி கொடுப்பதில்*
*அன்னைக்கு நிகர் யார் உண்டு*

*இப்பாரில்*
*இயற்கை அன்னைக்கு நிகர் யார் உண்டு*

*மனித சமுதாயத்தின் பேராசை*
*மண்ணை கெடுத்து*

*விளை நிலத்தை*
*வீணாக்குவதில்*
*முந்திக்கொண்டு*
*முன் நிற்கிறார்கள்.*
*நடப்பது அறியாமல் இச்சமுகம்*
*நாளை பற்றி சிந்திக்காமல்*

*துரித உணவில் மயங்கி*
*துயரத்தை நோக்கி பயணிக்கலாமா?*
*மருத்துவ மனையில்*
*தன் நிம்மதியை அடகு வைக்கலாமா?*

*பாட்டி வைத்தியம்*
*பத்தியம் இருக்குன்னு..!*

*கூகுளில் பழைய சாதம் என படித்து விட்டு*
*கூட்டு குடும்பங்களை மறந்து விட்டோம்.*

*விலங்குகளிடம் தான்*
*இவை இப்போதும் என்றால்*
*வியப்பாக தான் இருக்கிறது.*

*பார்க்க ஆர்வமாக இருக்குது*
*பாவமும் ஏக்கமும் மனதிற்குள் இருக்குது*

*சந்ததிகளின் எதிர்காலம் என*
*சிந்திக்க தொடங்கினால்.... அவை*
*இயற்கையின் கையில் என உணருங்கள்*
*இயற்கையை பேணிகாப்பதில்*
*ஏன் அச்சம் கொள்ள வேண்டும்?*
*எதிர்பாராமல் பலன் தரும் இயற்கை*
*எதிர்கால சந்ததிக்கு பயன் தருவதால்*

*இயற்கை பாதுகாப்பில்*
*இணைவோம்*
*நாளைய தலைமுறை*
*நலமாக வாழ*

*ஒன்றாக இணைவதில்*
*ஒருமித்த சிந்தனையில்*

*முன்மாதிரியாக*
*முதலில் நிற்போம்..*

# பல்லுயிர் பாதுகாப்பு

**'மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப**
**தன்னுயிர் அஞ்சும் வினை'(244)**

*நஞ்சு பாம்புகடியில்*
*அதுவே*
*ஊசியால் சென்றால்*
*மருந்து*

*ஊமத்தை என்றால்*
*வெறுப்பு*
*என்னற்ற வகையில்*
*அதுவே*
*சிறந்த மருந்து என்றால்*
*ஆச்சரியம்*

*என பலவகைகளில்*
*பல்லுயிர்*
*நமக்கு ஆற்றும் பணிகளில்*
*வியப்பு - அவற்றில்*

*ஒன்றுதான் நினைவலைகளில்*
*அறியாமை*
*அவைகளை பாதுகாப்பதில்*
*நாம்*
*சற்று ஓய்வு என்றால்*
*மிகையாகாது*

*நிமிடம் தாமதிக்காமல்*
*இணைந்து*
*அனைவரும் பணியாற்றினால்*

*மீண்டும்*
*நம்முடைய உலகில்*
*பல்லுயிர்*
*பறைசாற்றும் என்பதில்*

*எனக்கும்*
*அனைவருக்கும் வியப்பில்லாமல்*
*பல்லுயிர்*
*அக்கறையுடன் காப்பதில்*

*இணைவோம்*
*இன்புற்று இருப்போம்....*

# சீரமைப்பு

மனிதன் குரங்கில்
இருந்து
வந்த வரலாற்றில்
மாற்றம்
குரங்கு ஆனால்
மாறவில்லை
மனிதன் மாறினால்
என்ன

இதை தற்காலத்தில்
பரிணாமம்
குரங்கு ஆய்வகத்தில்
நமக்காக
உயிர் தானம் செய்வதில்
முதலிடம்
கொரனோ வைரஸ்சில்
வெற்றிகாண
முடிவும் முதலில்
குரங்குதானே

முயல் முந்தியது ஓட்டபந்தயத்தில்
பின்வாங்கியது

ஆமை என்றால்
ஏன்
அல்ல முடியாமல்
நம்மிடம்
இருந்து சிக்காமல்

*இருந்தும்*
*நாம் விடாமல்*
*அழிக்க*
*எடுக்கும் முயற்ச்சியால்*
*விளைவு*
*பண்னாட்டு சிகப்பு பட்டியலில்*
*முதலிடம்*

*இவ்வாறு பல்லுயிர்கள்*
*தினமும்*
*சேரும் பட்டியல்*
*நீளம்*
*இத்தகைய பட்டியல்*
*தேவையா*

*சிந்திப்பீர் செபல்படுவதில்*
*நாட்டுக்காக....*

# இயற்கைவளம்

இயற்கை தந்த வளமான வரம்
ஆம்.!

காடும், மலையும்
கடலும், பாலையும்
மருதமும் என ஐந்தும்
பஞ்சபூதங்களுக்க ஈடாக
இல்லை எதுவும், ஆனால்
விருட்சங்களாக மரங்களும்.
தீர்த்தமாக
ஆங்காங்கே குளங்களும்
பாதுகாத்து
இன்று வளம் எங்கே தேடும்
அளவுக்கு
குறுக்குப்பாதையில் நாம்
செல்கிறோம்

அன்டை நாடுகளில் வளம்
இல்லை
ஏங்குகிறார்கள் தினமும்
பார்க்க
நமக்கு வாய்ப்பு இருந்தும்
நினைப்பு
வருவதில்லை பலருக்கும்
காலம்
தாழ்த்தாமல் அனைவரும்
பகுத்துண்டு
பல்லுயிர் ஓம்புதல் கடமையாகும்ஞ்

*என்று*
*எண்ணாமல் வாழ்வின் ஆதாரம்..*

*இதுதான்*
*என என்னும் நேரம்*
*விரைவில்*
*அனைவர் மனதிலும்*
*மொட்டு*
*பூக்க தொடங்கும்*
*காயாக*
*சுவைக்கும் கனியாகும்*
*நாள்*
*மிகவும் தூரமில்லையாம்.*

*இது சாத்தியமாகும்.*
*என நம்பும்*
*இயற்கை*

# வேட்டையாடு

**'உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே**
**தவத்திற்கு உரு' (261)**

என்றவாறு கொல்லாமை, தவம், புலால் மறுத்தல் போன்ற அதிகாரங்களில் உயிர்களைக் கொல்லாதிருக்கும் அறம் பேசப்படுகிறது.

*அன்று*
*பொழுது போக்குக்காக தொடங்கியதாம்*
*இன்று*
*பொழுது சாய்ந்ததும் நடக்கிறதாம்*
*அன்று*
*மக்கள் தொகை கோடியாம்*
*இன்று*
*மக்கள் தொகையோ மில்லினம்*

*அன்று*
*விலங்கினங்கள் காட்டுக்குள் உலாவும்*
*இன்று*
*வெளிநிலங்கள் எங்கள் இடம்*
*என்று*
*பீடு நட்டை போடும்*
*யானைகள்*
*மனித மோதல் அதிகம்*
*நாம்*
*பார்க்கும் காட்சியாகும்*
*விளைவு*
*மனிதனுக்கு இழப்பீடும்*

*யானை*
*தன் இடத்தை தானமாக தருகிறதும்.*
*ஏன்*

*என்றால் வாயில்லா ஜீவனாம்..*
*எங்கே*
*நாம் போகிறோம்.*

*இனி*
*யோசித்தால் மட்டும்*
*மிஞ்சும்*
*யானையின் வம்சம்..*

*இந்தியாவின்*
*பாரம்பரிய விலங்கு யானையாம்*
*இல்லையேல்*
*டைனோசர் போல் யானையும்*
*புத்தகங்களில்*
*பட வரலாற்று கதையாகுமாம்.*

*இத்தகைய*
*நிகழ்வு நடக்க விடமாட்டோம்*
*என*
*நாம் ஒன்றாக இணைவோம்*
*பாதுகாப்பதில்*
*முன்னோடியாக திகழ்வோம்..!*

*இப்பாரில்*
*விநாயகராக வாழும் யானைக்காக!*

# மரம்

விதையா, மரமா முதலில்
இதற்கு
விடை தேடும் சமுதாயத்தில்
நாம்

விதையும் வேண்டாம்,
விருட்சமும் வேண்டாம்.
வெறும் இலையில்
இருந்தும்
விருட்சத்தை உருவாக்க முடியும்
என்பதில் வெற்றி
யோசிக்க நேரமிருந்தால்
ஏன்
இவ்வாறு என்பதில்
ஐயமில்லை

நாம் சுவாசிக்கும் காற்றில்
ஆக்ஜினனாக ($0_2$)
குடிக்கும் நீரில்
ஆக்சிஜனுடன் இணைந்த
நைட்ரஜனாக($H_2O$)
முடியும் மரத்தால்
ஆனால்
நம் கலியுகத்தில்
ஆக்சிஜன் ($0_2$)
செயற்கை சுவாசத்தில்
நாம்
திண்டாடியது நினைவில்
நீங்காது.

*ஏன் என்றால்*
*நாம்*
*தவறிவிட்டோம் வளர்ப்பதில்*
*மரம்*

*நான் எதுவும் கேட்பதில்லை உங்களிடத்தில்*
*ஒன்று*
*போதும் இடம் கிடைத்தால்*
*ஆம்*
*எனக்காக என்றல்ல*
*உங்களுக்காக*

*ஆம்*
*அக்கரையில்*
*என்று*
*மட்டும் நினைக்காதீர்கள்*
*உங்கள்இனம் தழைப்பதில்*
*ஆனந்தம் மட்டும் தருவதில்*
*எனக்கு*

*ஈடு எவருமில்லை*
*இப்பூவுலகில்*
*ஒன்று நடுவதில் தப்பில்லை*
*ஓங்கி*
*வளர்வதில் எனக்கு நிகரில்லை*
*இனியும்*
*யாராவது வருவாரா என ஐயமில்லை*
*எனக்கு*
*நிகர் கண்டுபிடிக்க*
*இப்பாரில்*
*இன்னும்*
*யாரும் வரவில்லை*

# உங்களுக்காக உறங்காமல்

ஆந்தை என்றால்
அச்சம் - தெற்கில்
கடவுளாக வணங்கும் பழக்கம்
வடக்கில்

ஏன் இந்த மூடப்பழக்கம்
கலியுகத்தில்
எலியால் பயிர்ச் சேதாரம்
உண்டு

இதை தடுக்க மருந்தை நம்பும்
மனிதன்
நான் இருக்க என்ன பயம்

நம்புங்க
எலிக்கு இயற்கையான எமனும்
உங்களுக்கு
செலவில்லாமல் பயனும்
சூழலுக்கேற்ப
வாழும் தகவமைப்பும்
என்னை
விட்டால் யார் தருவாராம்
இலவசமாக

நாம் யோசிக்கும் நேரம்
கால
தாமதம் செய்ய வேண்டாம்

நான்
இருக்க பயம் வேண்டாம்

*எலி*
*மட்டும் எனக்கு போதும்*

*லாபம் நீங்கள் அடையலாம்*
*உறுதியாக*

*சூழல் பணியில் என்றும்*
*உங்களுக்காக....*

*எங்கள் சந்ததிகளை நீங்களும்*
*காப்பாற்றுவீர்*

*என*
*நம்பிவாழும் ஆந்தையினம் ...*

*எங்களுக்காக*
*ஆகஸ்டு 4 நீங்கள் உருவாக்கிய தினம்*

# மகரந்தச் சேர்கை

பூச்சிகள் பல வண்ணங்களில்
எங்கும்
பார்கலாம் பல இடங்களில்
எதற்கு
என ஆராய்ந்ததில்
ஆம்

நாம் உண்ணும் ஒவ்வொன்றில்
நமக்கு
தெரியாமல் ரீங்காரம் செய்வதால்
பூ
பிஞ்சு, காய், கனி ஆவதால்
நமக்கு
சுவையான உணவு தயாராவதால்

பலன் எதுவும் எதிர்பாராமல்
பணி
செய்து கொண்டிருக்கும பூச்சிகள்
இன்று

விஷக் கொல்லிகளால்
தினமும்
குறைந்து போய் கொண்டிருப்பதால்
உருமாறும்
காலம் வந்தால்
விளைவு
உங்கள் கைகளில்
நாங்கள் அதிகம் சதவீத எண்ணிக்கையில்

*ஆனால்*
*அடிமைப்பட்டு இருக்கிறோம்*
*உங்கள் கைகளில்*
*வேண்டாம்*

*எங்களுக்கு மனிதர் என ஒதுக்கினால்*
*விடை*
*விட்டு விடுகிறோம் உங்கள் கைகளில்*
*எங்களுக்கு*
*எப்பொழுதும் இடம் உண்டு இவ்வுலகில்*
*உங்கள்*
*வாழ்க்கை எங்கள் கைகளில்*
*என*
*முதுகெலும்பு இல்லா விலங்கினங்கள்..*

# *சங்கிலி*

**எதிர் வரும் சவால்களைச் சமாளித்து இந்தியாவில் சிவிங்கிப்புலி பிழைத்துவிட்டால் புலி, சிங்கம், பனிச்சிறுத்தை (Snow Leopard), மேகச்சிறுத்தை (Clouded Leopard), சிறுத்தை என ஆறாவதாக சிவிங்கிப்புலி. இந்த ஆறும் வேட்டையாடும் பெரும்பூனை இனங்கள் வாழும் ஒரே நாடாக இந்தியா திகழும்.**

*சைக்கிள் ஓட்ட வேண்டும்*
*இயற்கையில்*
*வனங்களில் காண்போம்*
*தினமும்*
*ஒன்று அருந்தாலும்*
*ஓடாது*

*இயல்பான வாழ்கையும்*
*ஏன்*
*புரிதலில் தாமதம்*
*டோடோ பறவைகளை இழந்தோம்*

*டைனோசரையும் இழந்தோம்*
*பொட்டு வேங்கை இழந்தோம்*
*புலி, யானை அடுத்ததாம்*

*இவை*
*அல்லாமல் முதுகுஎலும்பு உள்ள நாம்*
*விடாமல் துரத்தி முதுகுஎலும்பு*
*இல்லாததையும் பட்டியலில்*
*சேர்த்தது நம் இனம்*
*அருமை*
*இப்படியாக பட்டியல் நீளும்*
*ஆனால்*

*பொருள் நிறைவாக இருக்கும்*
*வாங்க*
*யார்தான் இருப்போம்*
*இவ்வுலகில்*

*சிந்தித்து செயல்பட வேண்டும்*
*இல்லையேல்*
*மாற்று யுகம் வரும்*
*இயற்கை*
*நம் அனைவரையும்*
*ஆய்வுக்காக*
*கண் காணித்து கொண்டுள்ளதாம்...*

*உங்கள்*
*நலன் விரும்பும்*
*உணவுசங்கிலியாம்.....*

# பறவை

**"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள" (குறள் 527)**

*இனிமையாகப் குயில் பாடும்*
*ஆனால்*
*கூடு கட்ட தெரியாதாம்*
*காக்கை*
*கூட்டமாக தான் வாழும்*
*நாம்*
*கற்க வேண்டிய பாடம்*
*ஆனால்*

*ஆந்தை என்றால் அச்சம்*
*இருந்தும்*
*அதான் பயிரை காக்கும்*
*இயற்கை*
*நமக்கு தந்த அரணாகும்*

*கானமயிலாட*
*பார்க்க பரவசம்*
*ஆனால்*

*அதை வேட்டையாட ஆர்வம்*
*துரித*
*வாழ்கையில ஏன் அவசரம்*
*சிகப்பு*

*பறவை எண்ணிக்கை கூடும்*
*பார்க்க*
*வரும் காலத்தில் அச்சம்*

*முயற்ச்சி*
*எடுக்கவில்லை என வருத்தம்*
*இல்லையேல்*

*டோடோ பறவை போல்*
*ஆகி*
*விடுமே என்ற அச்சம்*

# மாசு

**“இடுமுள் வேலி எடுப்படு வரைப்பின்”**
**(பெரும் -154)**

என்ற பாடல் தனியிடங்கள் குப்பைகளை வெளியே போடக்கூடாது. அவற்றுக்கென தனி இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்ததையும், குப்பைகள் கொட்டப்படும் இடத்தைச் சுற்றிலும் பாதுகாப்பு வேலிகள் போடப்பட்டு இருந்ததையும் அழகாக பெரும் பாணாற்றுப்படையில் கூறியுள்ளது.

*பஞ்சபூதங்களில் ஒன்றில்*
*ஓசோன் படலம்*
*கல்லுக்குள் ஈரம்*
*ஆழ்குழாய்*
*கிணற்றில் சாயம்*
*ஏன்*

*நினைத்துப்பார்க்க அச்சம்*
*லாபம் ஈட்ட*
*குறுகிய வழியாம்*

*விளைவு*
*நொய்யலில் பார்க்கிறோம்*
*எண்ணூரில் பார்க்கிறோம்*
*நெடுஞ்சாலைகளில் அரலி அரணாகும்*
*நீர்*
*கரைகளில் பனையும், மருதமும்*
*நீர்*
*நிலையில் பிரம்பும் தாழையும்*
*இருக்க*
*அசுத்தம் சுத்தமாக்க வெற்றி வேரும்*
*என*

*விட்டு சென்ற முன்னோர் ஞானம்*
*எங்கு*
*போயிற்று அனைவருக்கும்*

*இனி*
*தாமதிக்காமல் அனைவரும்*
*ஒரு*
*மரத்தையாவது வைக்கலாம்*
*மாசு*
*இல்லாத தாவர உலகம்*

*இனி*
*ஒரு விதி செய்கவோம்*
*மாசில்லா*
*சுவாசம் அனைவருக்கும்*
*என்ற*
*ஆழ்ந்த நம்பிகையும்*
*பிஞ்சு*
*உள்ளங்களில் பதியட்டும்*

*பலன்*
*முன்னோர்கள் விட்டதாம்*
*மாசில்லா இயற்கையாம்*
*மரம்தான் மாசின் எதிரியாம்....*
*இயற்கையில் சமம் அனைவரும்...*

# *விருட்சம்*

**"தொன்று உறை கடவுள்" (அகம்.3-4)**
**"மன்ற மராஅத்த பேஎம் முதிர்கடவுள்"**
**(குறுந்தொகை.87.1)**
**"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**
**முறையுளி பராஅய் பாய்ந்தனர் தொழூஉ"**
**(கலித்தொகை.101.14-15)**
**"நல்அரை மராஅத்த கடவுள்"**
**(மலைபடுகடாம்.395).**
**"தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை மன்றப்**
**பெண்ணை வாங்கி மடற்குடம்பை"**
**(நற்றிணை.303.3-5)**

இப்பாடல்கள் பழந்தமிழர், மரங்களைக் கடவுளாக வழிபட்டுப் போற்றிப் பாதுகாத்தமையைக் கூறுகின்றன. கடற்கரைச் சோலைகளில் தாழை (கைதை, கண்டல்), நெய்தல், ஞாழல், புன்னை, பனை, அடப்பங்கொடிகள் போன்றவை ஒன்றோடொன்று இணைந்தே வளரக் கூடியன. இவை நெருங்கி வளர்வதால் அப்பகுதி கரிய சோலை போல் அடர்ந்திருக்கும். **"வெண்கோட்டு அருள் சிறைத்தா அய் கரைய கருங் கோட்டுப் புன்னை" (67.4-6)**என்ற பாடல் வெண்மையான மணல் குவிந்த கடற்கரை மேட்டில் கரிய அடிப்பகுதியையுடைய புன்னை மரங்கள் சிறை போல் எழும்பி இருக்கும் என்கிறது.

*வழிபாட்டுக்காக வளர்த்ததில்*
*இதுவரை*
*முன்னோர் தான் முதலில்*
*ஏன்*
*முடியல வளர்பதில்*
*நம்மால்*
*ஈடுபட தூண்டாததால்*
*என்னை*
*காணலாம் விருட்சமாக கோவிலில்*
*இல்லையேல்*
*ஊர் எல்லை காடுகளில்*
*இப்போது*
*கிராமம் நகரமாவதில்*

ஆதிக்கம்
எனக்குள்ள இடத்தில் (இடத்தை)
தியாகம்
எங்கு நான் நிற்பது என்பதில்
தீர்வு

நான் விருட்சம் என்பதால்
சில
இடத்தில் கோவில்களில்
மற்றும்
மக்கள் மனங்களில்
சில
படங்கள் பாடங்களில்
என்றும்
நீங்கள் விதைத்தால்
வருவேன்.

விருட்சம் என்பதால்
அனைவரும்
எனக்கு ஒன்றொன்பதால்
மனம்
வளர இடம் இருந்தால்
போதும்
பட்டா தேவையில்ல
ஏன்
நாங்கள் ஒருவராக வாசலில்
வருபவரை
வரவேற்கும் மகிழ்ச்சியில்
பல
தலைமுறை கடந்த நாங்கள்
வரும் தலைமுறை காப்பதும் நாங்கள்
நம்புங்கள்

# உலக மண் தினம்

**தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்**
**வேண்டாது சாலப் படும்**

**(குறள் எண்:1037)**

**உழுத நிலத்திலுள்ள உடைப்பட்ட மண் ஒரு பங்கு காற்பங்காகச் சுண்டும்படி ஆறவிட்டு (விதைத்தால்) கைப்பிடி எருவும்கூட இல்லாமலும் மிகுந்த விளைச்சலுண்டாகும்.**

*ஒரு அங்குலம் வர நூறுவருடம்*
*இந்த*
*பாரில் யாரும் செய்யாததாம்*
*இல்லை*

*காய்ந்து மக்கினால் உரம்*
*மண்*
*புழு எனக்கு துணையாகவும்*
*மனிதன்*
*எனக்கு பகையாகவும்*

*கால்*
*நூற்றாண்டாக நடக்கும் சம்பவம்*
*எனக்கு*
*பாதிப்பு எப்பொழுது வந்தாலும்*

*நான்*
*வளம் பெற பல ஆண்டுகளாகும்*

*அதை*
*அனுபவிக்க காக்க வேண்டும்*
*தலைமுறையாக*
*கழிவிலிருந்து கண்ட உரம்*
*இருக்க*
*ஏன் வேதியல் உரம்*

நான்
கேட்கவில்லை உங்களிடம்
நீங்களாக
எடுத்த எந்த முடிவும்
பாதகம்

எனக்கு தான் வரும்
மாற
இயற்கையான உரம்
எங்கும்
இனாமாக கிடைக்காதாம்

நீங்கள்
முயற்சிக்க வீட்டில் கிடைக்கும்
அனைவர்
வீடும் சிறு தேட்டம் ஆகும்

ஆரோக்கியம்
அனைவருடைய வீட்டிலும்
முன்னோர்கள்
இதையறிந்த செய்ததுவும்

நிறைய
வரலாற்றின் சான்றாகும்
மறதியின்
விளைவை பார்கிறோம்
தோட்டத்துக்கு மண் தேடுகிறோம்.

இப்பொழுது மணல் இல்லை
மண் எப்பொழுது என தொரியவில்லை

# *பாசம்*

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம். (77)**

*அதிகம் ஐந்தறிவு உயிர்களிடத்தில்*
*இதில்*
*யானை முதலிடத்தில்*

*காக்கை*
*கூட்டமாக வாழ்வதில்*
*தூக்கனாங்*
*குருவி கூடு கட்டுவதில்*
*இருவாட்சி*
*தன் இனத்தை காப்பதில்*

*நாம்*
*வருவதை ஆள்காட்டி பறவையில்*
*எச்சரிக்கை*
*அணில், குரங்கு மற்ற*
*விலங்கை காப்பதில் மாறா*
*விசுவாசம் காண்பிப்பதில்*

*செல்லப்பிராணிகள்*
*என்றும் முதலிடத்தில்*
*ஆம்*

*நாம் சற்று சிந்திக்க மறந்ததால்ஞ்*
*செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து*
*இயற்கை அறிந்து செயல்.*
*தகவமைப்பு*

*சூழலுக்கேற்ப பச்சோந்தியாக*
*காலில்லா*
*ஓட செதில்களாக*
*எலியை*
*கட்டுபடுத்தும் காரணிகளில் ஒன்றாக*
*காட்டில்*

*பிணம் தின்னும் கழுகாக*
*வீட்டுக்கு*
*வருபவரை முன் சொல்வதற்காக*
*காட்டில்*
*ஆனந்தமான இயற்கைக்காக*
*என்றும்*
*உங்களின் நலம் விரும்பியாக*
*பல்லுயிர்*

*இனிய சுவையான உணவுக்காக*
*இல்லையேல்*
*காண்போம் எங்கும் பிலாஸ்டிக்காக*
*தற்போது*
*எங்கும் குப்பை மேடாக*
*அதிலும்*
*அதிகம் எலக்டராணிக் கழிவாக*
*விளைவு*

*டெங்கு கொசுக்களாக*
*புதிய*
*பரிணாமத்தில் வியாதியை*
*பரப்ப*
*தெரிந்த சிறு பூச்சியினம்*
*மாற*

*வழியில்லா மனித இனம்*
*வழி*
*எப்படி கண்டுபிடிக்கும்*
*எங்கள்*
*தகவமைப்பு மாறும்*

*நீங்கள்*
*மாற நீண்ட யுகம் ஆகும்.*

# சீரமைப்பு

*"வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு" (குறள் 595 )*

*ஆறு, குளம் ஏரி, குட்டை
என
அதிகம் ஆக்கிரமைப்பு
கடலில்
குவியும் குப்பை அதிகரிப்பு*

*பூமி
பற்றவில்லை செவ்வாய்க்கும் படையெடுப்பு
மனித தேடல் அதிகரிப்பு
ஏன்
இந்த வித்தியாசமான சிந்திப்பு
யார்
வாழ இந்த பரபரப்பு*

*நமக்கான
தேவைகள் அதிகரிப்பு
நாமே
இல்லாத
தேவைகள் அதிகரிப்பு
நமக்கே*

*இயற்கை வளம் என எதிர்பார்ப்பு
விளைவு
நீர்நிலைகள் சீரமைப்பு
இருப்பதைப் நன்றாகப் பாதுகாத்து*

புதியதோர் உலகத்திற்கான பங்களிப்பு
நம் சந்ததிகளுக்கும் பூரிப்பு.

பாரதி கூற்றைப் போல்
புதியதோர் உலகம் படைப்பு

வளரும் சந்ததியினர் திகைப்பு
நம்

மூதாதையினரின் சிந்திப்பு
வரும் தலைமுறையினருக்கும் பாதுகாப்பு..

# சதுப்புநிலம்

**இயற்கையின் படைப்பில் ஒரு விந்தை**
**அலையாத்தி வனம்**
**('கடல்அலை + ஆறு+ வனம்= அலையாத்தி வனம்')**

*உப்பங்கழிகள் தான் வாழ்விடம்*
*உலக அளவில் குறைவானது எங்கள் இடம்.*
*அரிய வகைத் தாவரங்களில் முதலிடம்*
*முற்றிலும் மாறுபட்ட சூழல்*
*உப்பு நீர் மட்டும் போதும்.*

*அதிகமான வெப்பம், மழை தாங்குவோம்.*
*எனக்கு வேர் கீழும், மேலும்*
*நிலைத்து நிற்க சுவாசிக்க*
*பேரிடர் காலத்தில் காப்பாற்ற*
*கடல் சீற்றத்தை தாங்குவோம்.*
*நீரின் வேகத்தை கட்டுப்படுத்துவோம்.*
*புயல் போன்ற காற்றையும் எதிர்த்து நிற்போம்*
*மணல் அரிப்பை தடுப்போம்.*

*புரதம் மிகுந்த இலை மீனுக்கு*
*காய்ந்த இலை உரமாகும்*
*கழிவுநீரை சுத்திகரிப்போம்*
*ஏனோ இன்னும் மனித இனம்*
*மட்டும் எங்களை புரிந்து கொள்ள*
*நாளும் காத்திருப்போம்.*
*நாங்கள் நிலைத்திருப்போம்.*

# அனைத்தும் யாருக்காக

**"ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை**
**நாகம் உயிர்ப்பக் கெடும்". - குறள் 763**

*நாலும், இரண்டும், சொல்லுக்குறுதி*
*ஆலும். வேலும் பல்லுக்குறுதி*

*அடக்க கூடியவை ஐம்புலன்கள்*
*அடக்க முடியாதவை பஞ்சபூதங்கள்*

*தன்னலமற்ற தண்ணீராக*
*இயற்கை பிறர் நலத்துக்காக*

*தன்னிகரற்ற ஆகாயமாக*
*தாறை வார்க்கும் மழையாக*

*மாசில்லா காற்றாக*
*மாசடைந்த ஓசோனாக*

*மனிதனின் சாதனையாக*
*வரலாற்றில் பிழையாக*

*வரும் சந்ததியினர் ஒப்பீடாக*
*நம்மை காண்பிக்க*

*இவ்வுலகம் வளரும் சந்ததிக்காக*
*என்ற ஆழ்ந்த தொலை நோக்காக*
*ஆரோக்கியமான பஞ்சபூதங்களாக*

*நடந்ததை மறக்க*
*நடப்பதை யோசிக்க*

*நடக்கும் என ஆனித்தரமாக*
*அனைவரின் சிந்தனைக்காக*

*இப்பதிவுகள் உங்களுக்காக*
*இருப்பதை விட்டுவிட்டு*
*பறக்க ஆசைப்படுவதாக*

*புதியதோர் உலகம் செய்ய முடியாது*
*என்பதற்காக.*

 பள்ளிகள், கல்லூரிகள்,

 மருத்துவமனைகள்

 வணிகவளாகங்கள் ..என

 மண் இருக்கும் இடமெல்லாம்

 மரம் வைத்து தருகிறோம்.

 மாடிதோட்டம்

 வீட்டுத்தோட்டம்

 விதைகள், செடிகள், நாற்று, கன்று

 பயிற்சி வகுப்புகள்

என அனைத்தும் 30 ஆண்டு அனுபவம்
பன்னாட்டு விருது பெற்ற
சூழலியல் ஆலோசகரின் அறிவுரையில் ...

தொடர்பு கொள்க:
விளாங்குறிச்சி, கோயம்புத்தூர்.
mobile:86678 75528 email:
infonatureforfuture@gmail.com

# ஆசிரியரின் பிற நூல்கள்...






























புத்தகங்களை பெற
தொடர்பு
கொள்ளுங்கள்




செல்லும் இடமெல்லாம்
படிக்க
புத்தகங்களை
நேசியுங்கள்

brspathy@ gmail.com

# ஆசிரியரைப் பற்றி..



1987ல் தொடங்கிய இரண்டு ஆண்டு கிழக்குத் தொடர்ச்சி மலை பறவைகள் ஆய்வுப் பயணம், கோவை மாவட்டத்தில் உள்ள நீலகிரி உயிர்கோள இயற்கைப் பூங்காவில் இருபது வருடங்களாக ஒருங்கிணைப்பாளராக பணியாற்றிய அனுபவம் பெற்ற இவருக்கு பறவைகள் பற்றிய ஆவல் இன்றும் குறையவில்லை.

சமீபமாக பத்து வருடங்கள், பிச்சாண்டிக்குளம் காடுகள் ஆலோசனை மையத்தின் மூலம் சென்னை அடையாறு கழிமுக பகுதியில் உள்ள தொல்காப்பியர் பூங்காவில் பராமரிப்பு மேலாளராக பணியாற்றிய அனுபவம் கடல்சார்ந்த பறவைகள் பற்றி அறிந்து கொள்ள துணையாக இருந்தது.

வனஉயிரியல் (Wildlife Biology) முதுகலை பட்டம் பெற்றுள்ள இவர் (M.Sc., M.Phil.,) இந்தியாவின் தேசிய பறவையான மயில் பற்றியும் அதன் வாழ்வியல் நிலை குறித்தும் ஆய்வு செய்துள்ளார்.

1987ல் தொடங்கிய பறவைகள் பற்றிய ஆய்வு இன்றும் தொடர இயற்கை இவருக்கு உறுதுணையாக இருப்பது இயற்கை இவருக்கு கொடுத்த பரிசாகவே உள்ளது.

இவரின் படைப்புகள் தமிழில் வருவது இவருக்குள்ள தமிழ் ஆர்வத்தை எடுத்து காட்டுவதாகவும் தமிழோடு அறிவியலை வளர்ப்போம் என்ற இவரது சிந்தனையும் மக்கள் மத்தியில் வரவேற்பு பெற்றுள்ளது என்றால் அது மிகையில்லை.

